# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

**விளம்பி – வைகாசி – 2018 – மே**




தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகளின் 96 – ஆவது பிறந்தநாள் விழா
நிகழ்ச்சியில் ஆன்மீகச் செல்வர் அபிராமி ராமநாதன் அவர்களுடன்
சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - வைகாசி - 2018 - மே  இதழ் - 71

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

கருநீல மிடற்றானைக் கண்கள் மூன் றுடையானைக்
கையிலனல் கொண்டானைக் கருணை காட்டிக்
காப்பானை ஏயர்கோன் இடர்கள் தீரக்
கவிபடைத்த சுந்தரர்க்குத் தோழனான
பெரியவனைக் கங்கையெனும் ஆறுடைய பெருமானைப்
பித்தனெனத் திருமுறைகள் போற்றி செய்யும்
பிஞ்ஞகனைக் கழனிநகர் உறைவான் தன்னைப்
பெருந்துறையில் வாழ்வானைப் பேதம் இன்றித்
திருமாலும் நான்முகனும் தேடிடினும் காணாதான்
திங்களுக்கு வாழ்வளித்த தேவ தேவன்
திருவண்ணா மலையானைத் தெய்வக் கோமான்
திருமுறைக்குப் பொருளானான் என்று போற்ற
வருவானைக் கொற்றவாள் தனைமறைத்து மன்னவனை
வரவழைத்துக் கோயிலொன்று கண்டான் தன்னை
வதுவைகொண்ட வடிவழகி நெல்லைத் தாயை
வணங்கியவர் நலம்பெறுவார் வணங்கு வோமே.

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

இந்தியா என்பதும் பாரதம் என்பதும் ஆங்கிலேயர் காலத்திற்குப் பின் ஏற்பட்டவை. பல்வேறு அரசாங்கங்களாகப் பிரிந்து சிதறிக் கிடந்த சிறு சிறு பகுதிகளாக இருந்தது. நாடு சுதந்திரம் பெற்ற பின் சர்தார் வல்லபாய் பட்டேலின் பெரும் முயற்சியாலும், கண்டிப்பான நடைமுறையாலும் ஒன்றிணைந்து இந்தியா - பாரத தேசம் என்று அழைக்கும் நாடாக உருவானது. காலங்காலமாக இந்தப் பூமியில் கடைப்பிடிக்கப் பட்டு வந்த சனாதன தர்மத்தை இந்து மதம் என்று அழைக்கத் தொடங்கினார்கள். சனாதன தர்மம் என்பது வாழ்க்கை நெறிமுறைகளைக் கடைப்பிடித்து மண்ணில் பணியையும், காலத்தினையும் போற்றுகின்ற நெறிமுறைகளே சனாதன தர்மம் என்று அழைக்கப்பட்டது.

எழுதாக் கிளவி என்று அழைக்கப்படும் வேத சாத்திரங்கள் அனைத்தையும் ஒப்புக்கொண்ட மதங்கள் ஒன்றாக இணைந்து இந்து மதம் என்று அழைக்கப்படுகிறது. பாரம்பரியமாக அனுசரிக்கப்பட்டு வந்த சைவம், அசைவம், வேதாந்தம் ஆகிய தத்துவங்கள் இந்து மதத்தினுடைய பிரிவுகளாக ஏற்பட்டவை. வேதாந்தம் என்பது நாம ரூபமற்ற சைதன்ய பரம்பொருளாகக் கொண்டு அதனைக் கேட்டுக் கற்று உணர்ந்து அனுபவிப்பதே; வேதாந்தம் மதத்தின் முக்கிய குறிக்கோளாகும். வேதாந்தம் என்பது ஆதிசங்கரர் காலத்திற்குப் பின் உருவாக்கப்பட்டது என்ற கருத்து தவறானது. வேதாந்தம் என்றால் ஞானம், அறிவு என்று பொருள்படும். அதனுடைய அந்தமாகியது ஞானத்தில் எல்லை என்று அறியப்படுவது. வேதாந்தங்களிலே கர்ம காரணியம் என்பது உலகியலில் வாழ வேண்டிய நெறிமுறைகளையும் அதற்குரிய சாதகங்களைப் பற்றியும் விரிவாக எடுத்துரைப்பது. கர்ம காரணியத்திலே பலவிதமான யாகங்கள், ஹோமங்கள் விரிவாக்கப்பட்டு அது செயல்பட வேண்டிய நெறிமுறைகளையும் எடுத்துச் சொல்வது ஆகும். வேதாந்தம் என்பது உபநிஷத்துக்களின் தொகுப்பாகும். ஆயிரக்கணக்கான உபநிஷத்துக்கள் இருந்ததாகப் பல நூல்களிலே குறிக்கப்பட்டுள்ளன. 12ஆம் நூற்றாண்டிலே சங்கரர் தோன்றிச் சில உபநிஷத்துக்களுக்குப் பாஷ்யம் என்று அழைக்கப்படும்

ஆழமான விரிவுரைகளை அருளச் செய்தார். அதன் பின்னர்தான் வேதாந்தத் தத்துவங்கள் மக்களிடையே பரவத் தொடங்கின. இப்பொழுதும் துறவிகளும் ஒரு இனத்தைச் சார்ந்தவரிடமே வேதாந்தங்களை அதுவும் வடமொழியில்தான் கற்க வேண்டும் என்ற ஒரு மாயையை உருவாக்கியிருந்தார்கள்.

6, 7ஆம் நூற்றாண்டுகளுக்கு முன்னர் சிருங்கேரி சங்கராச்சாரியர் மடத்தில் குருமகா சந்நிதானமாக இருந்த வித்யாரனிஷ் எனும் குரு மகானிடம் வடமொழியில் வேதாந்தம் கற்று அவற்றின் சாரத்தைத் தமிழ் மொழியில் இனிய செய்யுளாக வடிவமைத்துத் தமிழ் வேதாந்தம் உருவாக்கப்பட்டது. இதனை உருவாக்கியதும், வளர்த்ததுமான பெருமை நம் கோவிலூர் மடத்தையே சாரும்; அவை 16 நூல்களாக வரிசைப்படுத்தப்பட்டுப் பல்கலைக்கழகப் பாடத் திட்டம் போல் அமைக்கப்பெற்றுக் கடந்த 300 ஆண்டுகளாக ஆர்வமுள்ள ஆன்மீக வாதிகளுக்குப் போதிக்கப்பட்டு வருகின்றது. இது கோவிலூர் மரபு வேதாந்தம் என்று புகழ்பெற்று வடநாட்டிலும், பாரததேசத்தில் எங்கும் சிறப்பிக்கப்பட்டு வருகின்றது.

இந்த நூல்களைக் கேட்டு, கற்று, சிந்தித்து, விசாரித்து அனுபவித்து நம்முன்னே ஆன்ம சொரூபமாக இருந்து நம்மை இயக்குகின்றது என்ற அனுபவபூர்வமான உணர்வைப் பெற்றுவிட்டால் அந்த அனுபவம் இந்த மண்ணிலே வீடுபேறு அடைந்த ஜீவன்முக்தனாக வாழ வழிவகுக்கும்.

எந்த ஆசையையும் அடைய வேண்டும் என்கிற முயற்சியில் அதனால் ஏற்படுகின்ற துயரங்களும் கவலையும் அச்சமும் நீக்கப்பெற்று நிர்மலமான மனத்தோடு வாழ்கிறவர்கள் ஜீவன்முக்தன் என்று அழைக்கப்படுவார். வேதாந்தத்தின் அடிப்படைக் கருத்து சர்வ துக்க நிவர்த்தி பரமார்த்த பிரபஞ்சம் என்பதே. துயரங்களைத் தவிர்த்து இடையறாத பேரின்பத்தை அடைந்தவன் ஜீவன் முக்தன் ஆகிறான்; இதனை வள்ளுவர்

*யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்*
*அதனின் அதனின் இலன்*

என்று குறிப்பிடுகின்றார்.

***ஆசீர்வாதங்கள்!***

# தொகையடியார்

## (முனைவர். கரு. முத்தய்யா)

சேக்கிழாரின் பெரிய புராணம், அறுபத்து மூன்று தனியடியார்களின் வரலாற்றையும், ஒன்பது தொகையடியார்கள் பற்றிய குறிப்பையும் சொல்கிறது. பெரியபுராணம் சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையின் விரிநூலாகும். அந்த மூலநூலிலேயே அறுபத்துமூன்று தனியடியார்களும் ஒன்பது தொகையடியார்களும் இடம் பெறுகின்றனர்.

ஒன்பது தொகையடியார் எனச் சொல்கிறோமே தவிர, அத்தொடர் உண்மையில் ஒன்பது பேரைக் குறிக்கவில்லை. ஒன்பது குழுவினரைக் குறிக்கிறது. என்றால் அறுபத்து மூன்று தனியடியார்களைச் சொன்ன சுந்தரர், கூடுதலாக ஒன்பது தொகையடியார் குழுக்களைச் சொல்ல வேண்டிய காரணம் என்ன?

அறுபத்து மூன்று தனியடியார்களில் பெரும் பாலானவர்களைப் பொறுத்தவரை அவர்கள் வாழ்ந்த காலத்தில் அவர்தம் பக்திச்சிறப்பினை உலகோர் அறிந்து அவரைப் பாராட்டியதாகச் செய்தி இல்லை. ஒவ்வொரு தனியடியாரும் தம் வாழ்வில் செயற்கரிய செயலாக ஒரு செயலைச் செய்து, அவ்வாறு செய்த உடன், இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற பின்னர் தாம் அவர்களை உலகோர் அறிந்துகொண்டு போற்றவும், வழிபடவும் தலைப்பட்டனர் என்பதே உண்மை.

இதனை நினைந்த சுந்தரர் பக்திச்சிறப்புடைய அடியார்களை, அவர்கள் வாழும் போதே இனம் கண்டு, அவர்தம் பெருமையை உணர்ந்து, சைவ உலகினர் அவர்களைப் போற்ற வேண்டும் என்று கருதினார். எனவே தொகையடியார் என்ற நிலையில் ஒன்பது குழுவினரின் பண்புகளை மட்டும் சொல்லிப் போந்தார்.

இப்பண்புடையோர்களைச் சந்திக்க நேர்ந்தால், அவர்தம் பண்பு நலன்களைப் புரிந்து கொள்ள முடிந்தால் அவர்கள் வாழும் காலத்திலேயே அவர்களைப் போற்றிப் பாராட்டுங்கள் என்று உலகோருக்கு அறிவுறுத்தவே சுந்தரர் தொகையடியார் என ஒன்பது குழுவினரைக் குறிப்பிடுகிறார் எனக் கருதத் தோன்றுகிறது.

எனவே, அத்தொகையடியார் ஒன்பது பேரின் பண்புகளாகச் சுந்தரர் எவற்றைச் சுட்டுகிறார். அவற்றைச் சேக்கிழார் எவ்வாறு விரித்துரைத்து விளக்குகிறார் என்பதை விரிவாகக் காணலாம்.

தொகையடியார் ஒன்பது என்று பொதுவாகச் சொன்னாலும், உண்மையில் எட்டுக்குழுவினரைத்தான் சுந்தரர் சொல்கிறார் என்பது திருத்தொண்டத் தொகையை நுணுகிக் கற்போர்க் குப்புலப்படும். ஏனெனில், தொகையடியாரின் இறுதியாகச் சொல்லப்படும் அப்பாலும் அடிச்சார்ந்தார் என்பது ஏனைய தனியடியார், தொகையடியார் அனைவருக்குமான புறனடை **(Exception)** என்பது, சேக்கிழாரால் தெளிவுபடுத்தப்படுகிறது. மூவேந்தர் தமிழ் வழங்கும் நிலத்துக்கு அப்பாலும், திருத்தொண்டத் தொகையில் கூறப்பெற்ற நற்றொண்டர் காலத்துக்கு முன்னும் பின்னும் வாழ்ந்து, சிவனடியைச் சார்ந்திருப் போரே அப்பாலும் அடிச் சார்ந்தார் எனக் கூறுகிறார் சேக்கிழார்.

சிவனடியைச் சார்ந்திருப்பது என்பதன் விளக்கமே, தொகையடியாரில் ஏனைய எட்டுக் குழுக்கள் பற்றிச் சொல்லப்படும் பண்பு நலன்கள். எனவே, இடத்தாலும், காலத்தாலும் புறனடையாக உள்ள அடியார்களே அப்பாலும் அடிச்சார்ந்தார் என்ற முடிவிற்கு வரலாம். வந்தபின் ஏனைய எட்டுக்குழுக்களின் பண்பு நலன்கள் பற்றிக் கூர்ந்து நோக்கலாம். முதலில் திருவாரூர்ப் பிறந்தார்கள் என்ற குழுவைப் பார்க்கலாம். திருவாரூரில் பிறந்தவர்கள் அனைவருமே போற்றத்தக்க சிவனடியார்கள். ஏனெனில் சிவகணங்களே திருவாரூரில் வந்து மனிதர்களாகப் பிறக்கின்றனர் என்பது சைவ உலகின் நம்பிக்கை. இதனை நமிநந்தியடிகள் வரலாற்றிலும் சேக்கிழார் உறுதி செய்கிறார்.

ஆயினும் அத்தொடரை அப்படியே பொருள் கொள்ளாமல், சில நிபந்தனைகளோடு பொருள்கொள்ள வேண்டியது இன்றைய காலத்தின் கட்டாயமாக நமக்குத் தோன்றுகிறது. ஏனெனில் தொகை திருவாரூர்ப் பிறந்தார் என்று மட்டுமே சொல்கிறது. பண்பு எதனையும் சுட்டவில்லை. விரி, சிவகணங்கள் திருவாரூரில் பிறப்பதால், திருவாரூர்ப் பிறந்தார் வணங்கத்தக்க அடியார்கள் என்று மட்டுமே விரிக்கிறதே தவிர, அதுவும் பண்புகள் எதனையும் கூறவில்லை.

இக்காலச் சூழலில் நாம் சிந்திக்கும் போது திருவாரூரில் பிறசமயம் சார்ந்த குடும்பங்களும் வாழ்கின்றன. அக்குடும்பத்திலும் பிள்ளைகள் பிறக்கின்றன. அவற்றை நாம் அறுபத்து மூவருக்கு இணையான தொண்டர்களாகக் கொள்ள இயலுமா? என்பது சிந்திக்க வேண்டிய செய்திதானே. எனவே, திருவாரூரில் பிறந்து சிவனடியேசிந்தித்து வாழ்வோர் தொகையடியாராகப் போற்றத் தக்கவர்கள் எனத் திருத்தொண்டத் தொகையின் தொடரை (திருவாரூர்ப் பிறந்தார்கள்) ஒரு நிபந்தனையோடு ஏற்பதே பொருத்தம் என்று தோன்றுகிறது.

அடுத்து தில்லை வாழ் அந்தணர் என்ற குழுவை (தொகையடியாறை)ப் பார்க்கலாம். தில்லை வாழ்அநதணர் என்பது ஓர் இனத்தை (தீட்சிதர்கள்)க் குறிக்கும். திருவாரூரில் பிறந்தவர்கள் எல்லோரும் தொகையடியார்கள் என்று சொன்னது போலச் சொல்லாமல் சுந்தரரே தம் தொகை நூலில் ஒரு நிபந்தனையைச் சொல்கிறார். தில்லை வாழ் அந்தணர், என்பதில் அந்நிபந்தனை வெளிப்படுகிறது. இதனையும் இக்காலச்சூழலில் சிந்தித்தால் இன்னும் தெளிவு பிறக்கும். தீட்சிதர் குடியில் பிறந்து, தமிழ் நாட்டின் பிற ஊர்களில், அல்லது பிற மாநிலங்களில், அல்லது வெளிநாடுகளில் வேலைக்குச் சென்று பணியாற்றுகிறவர்களை இன்று காண முடிகிறது. அப்படிப்பட்டவர்கள் தொகையடியார்கள் என்ற குழுவில் சேரமாட்டார்கள்; தில்லையில் வாழும் தீட்சிதர்களே சேர்வார்கள் என்பதைத் தொகை உறுதிப்படுத்துகிறது.

இனி விரிநூல் இன்னும் சில நிபந்தனைகளை விவரிக்கிறது. தீட்சிதர் குடியில் பிறந்து, தில்லையிலேயே வாழ்ந்தாலும் அங்கே வேறுபணியில் அமர்ந்தவர்கள் தொகையடியார் ஆகார். நிருத்தனுக்குரிய தொண்டாம் பேற்றினர் என்கிறார் சேகிழார்.

ஆகத்தில்லையில், தீட்சிதர் குடியில் பிறந்து, தில்லையிலேயே வாழ்ந்து, கூத்தப்பிரான் கோவிலில் அகம்படித் தொண்டுகள் (திருவலகிடுதலில் இருந்து அருச்சனை, அபிஷேகம் செய்வதுவரை) செய்வோர் மட்டுமே தொகையடியார் பட்டியலில் இடம்பெறத் தக்கோர் என்பது சேக்கிழார் காட்டும் விளக்கம்.

அடுத்து, முப்போதும் திருமேனி தீண்டுவார் என்பதைப்

பார்க்கலாம். முன்னர்ப் பார்த்த இரு தொகையடியாரும் பிறப்புக் காரணமாகப் பட்டியலில் இடம் பெறுகின்றனர். இவர்களோ தொழில் காரணமாக இடம் பெறுகின்றனர். காலை, மதியம், இரவு என மூன்று நேரங்களிலும் இறைவனின் திருமேனியைத் தீண்டி அருச்சனை அபிஷேகம் செய்வோர் இத்தொடரால் குறிக்கப் பெறுகின்றனர்.

சுந்தரர் காலத்தில், சேக்கிழார் காலத்தில் எல்லாம் ஆதி சைவ மரபினர் மட்டுமே திருமேனிதீண்டும் உரிமையைப் பெற்றிருந்தனர். இப்போது..? அரசு யார் வேண்டுமானலும் அர்ச்சகர் ஆகலாம்; அதற்குரிய கல்வியைக் கற்றால் போதும் என்று சட்டமே கொண்டுவந்து விட்டகாலம் இது. எதிர்காலத்தில் இப்படி நிகழும் என்பதை அறிந்தோ, அறியாமலோ சுந்தரர் இந்தத் தொடரில் மரபு பற்றிய குறிப்பு எதனையும் கூறவில்லை. ஆனால் சேக்கிழார் முதற் சைவராம் என்று கூறுவது ஆதிசைவரையே குறிக்கும். ஆயினும் சேக்கிழார் அந்த மரபில் பிறப்பதோ, அருச்சனை செய்வதோ இப்பட்டியலில் இடம் பெறப் போதுமான தகுதிகள் ஆகிவிடாது என்று கருதிக் கூடுதலாக ஒரு நிபந்தனையைக் குறிப்பிடுகிறார்.

*அப்போதைக் கப்போதும் ஆர்வமிகு அன்பினராய்*
*முப்போதும் அர்ச்சிப்பார்*

என்பது சேக்கிழார் கூற்று.

அதாவது அருச்சனை செய்பவர் ஊதியத்திற்காகவோ, கடமைக்காகவோ அருச்சனை செய்யாமல் உள்ளூறிவரும் பக்தி உணர்வுடன் அருச்சிக்க வேண்டும். அப்போது தான் அவர் தொகையடியார் பட்டியலுக்கு வரலாம் என்பது சேக்கிழார் கருத்து. இந்த அடிப்படையோடு பார்த்தால் இன்றைய கால அர்ச்சகர்களுள் எத்தனை பேர் பட்டியலில் இடம் பெறத்தகுதி உடையோர் ஆவர் என்பதைச் சைவ உலகம் அளவிட்டு அறிந்து கொள்ளும்.

தொகையடியார் பற்றிய தொடர்களுள் இதுவரை பார்த்த நான்கைத்தவிர ஏனைய ஐந்தும் முழுக்க முழுக்கப் பண்புகளையே கூறுவன எனலாம். அவற்றுள், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் என்பது முழுக்க முழுக்க அகம் பற்றிய பண்பு. யார் இப்பண்புடையவர் என்பதை நாம் கண்டறிவதே மிகக்கடினம். பெரிய புராணத்தில் இத்தொடருக்கு விளக்கமாக அமைவோர் இருவர். பூசலாரும்,

வாயிலாரும். அவர்களுள் பூசலாரை இறைவன் இனம் காட்டியதால் உலகம் புரிந்து கொண்டு அவர்வாழும் போதே அவரைப் பணிந்தது.

ஆனால் வாயிலாரை அவ்வாறு இறைவன் இனம் காட்டவில்லை. அதனால் அவர் காலத்திற்குப் பின்னர், அவர்தொகையிலும், விரியிலும் குறிப்பிடப் பெற்ற பின்னரே போற்றப்பெற்றார். ஆகவே முழுக்க முழுக்க அகம் பற்றிய இப்பண்பை, அவ்வாறு வாழும் தொண்டர் உடன் நெருக்கமாகப் பழகி வாழும் உறவு, நட்பு பூண்டவர்கள் வாயிலாக அறிய முடிந்தால், அவர்களைத் தொகையடியார் பட்டியலில் சேர்த்து வாழும்போதே அவர்களை வணங்கலாம்.

அடுத்து முழுநீறு பூசிய முனிவர் இது முழுக்கப் புறம் சார்ந்த பண்பு. வெளிப்படையாகச் சொல்வதானால் புறக்கோலம் அல்லது வேடம் என்று கூடச் சொல்லலாம். வேடத்தையும், உண்மைப் பண்பாகக் கொண்டு போற்ற வேண்டும் என்பதை மெய்ப்பொருள் நாயனார் வரலாறும், ஏனாதி நாதர் வரலாறும் சுட்டுகின்றன. ஆனால் அது எல்லோராலும் இயலாது. எனவே, கோலம் நீறு பூசியதாயினும், அவர் பக்தித்திறத்தைச் செயல்களாலும், முன்னரே அவரை அறிந்தவர்களாலும் தெரிந்து கொண்டு போற்றுவதே பொருத்தமாக இருக்கும்.

அடுத்து பொய்யடிமை இல்லாத புலவர் இத்தொடர் அறிவும், உணர்வும் சார்ந்தது. மொழியை (அது தமிழாக இருக்கலாம்; பிறமொழியாகவும் இருக்கலாம்) நன்கு கற்றுணர்ந்து, அதன் வாயிலாக நூல் செய்யும் ஆற்றல் சான்றோரே புலவர். ஆனால் தொகை அவர்கட்கு விதிக்கும் நிபந்தனை பொய்யடிமை இல்லாத என்பதாகும். அதாவது இவ்வுலகில் இறைவன் ஒருவனே மெய். ஏனைய அரசர், செல்வர், பொன், பொருள், இடம் இவையெல்லாம் பொய். எனவே தாம் செய்யாமல், இறைவனை மட்டுமே புகழ்ந்து நூல் செய்யும் புலவர்களே இப்பட்டியலில் இடம் பெறத்தக்கவர் என்பது குறிப்பு. இதனை நாம் எளிதாக அறிந்து கொள்ளலாம்.

புலவர் செய்த நூலைப் படித்து அறியும் அறிவுள்ள எவரும் அவரது நூல் இறைவனைத்தான் போற்றுகிறதா? பொய்ப்

பொருளள்களைப் போற்றுகிறதா? என அறிந்து கொள்ள இயலும். எனவே இத்தொடர் குறிக்கும் தொகையடியார் குழு எளிதில் இனம் காணத்தக்க குழு எனலாம்.

அடுத்து பரமனையே பாடுவார் இந்தத் தொடர் இருபொருள் தருவதாக அமைகிறது. எவ்வாறெனின் தமிழில் பாடுதல் என்பது நூல் இயற்றுதலையும் குறிக்கும். இசையோடு பாடுதலையும் குறிக்கும். சேக்கிழார் பெரியபுராணத்தைப் பாடினார் என்றும் கூறலாம், ஓதுவார் தேவாரம் பாடினார் என்றும் கூறலாம். ஆனால் அவற்றுள் இத்தொடர் இரண்டாவதாகக் கூறிய (இசையோடு பாடுதல்) பொருளையே குறிக்கும் எனலாம். ஏனெனில் முதலில் கூறிய பொருளைப் பொய்யடிமை இல்லாத புலவர் என்ற தொடர் குறித்துள்ளதால் இங்கே இசையோடு பாடுதலையே குறிக்கிறது என்பது தெளிவு. இங்கேயும் சேக்கிழார் ஒன்றிய மெய் உணர்வோடும் உள்ளுருகிப்பாடுவார் என்று ஒரு நிபந்தனையைக் கூறுகிறார். இசைக்கேற்ப மட்டும் பாடாமல் பக்தி உணர்வு மனத்திலும், மெய்யிலும் தோன்றப்பாடுவோரே தொகையடியார் ஆவர் என்பது சேக்கிழார் கருத்து.

இறுதியாக பத்தராய்ப் பணிவார். இத்தொடரைச் சேக்கிழார் பத்தராய்ப் பத்தரைப்பணிவார் என்ற பொருளில் விரிக்கிறார். ஈசனைப் பணிவது போலவே ஈசனடியாரையும் பணிபவர்கள் இக்குழுவில் அடங்குவர் என்பது சேக்கிழார் கருத்து. மன்றாடும் மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை இவர்தம் பண்பு என்று விளக்குகிறார் சேக்கிழார். எனவே அம்மலர்ப் பாதத்தை வணங்கும் பிற சிவனடியார்களைக் காணும் போது இவர்கள், ஆவின் பின் கன்றணைவது போல் அவ்வடியார்பால் அணைவர் என்று விளக்குகிறார்.

தொகையடியாரைப் பற்றிய இச்சிந்தனையின் முடிவுகளைக் கீழ்வருமாறு தொகுக்கலாம்.

1. அறுபத்து மூவருக்கு இணையான அடியார்களை அவர்கள் வாழும் போதே இனம்கண்டு போற்ற வேண்டும் என்ற நோக்கத்திலேயே தொகையடியார் பற்றித் திருத்தொண்டத் தொகை பேசுகிறது.

2. அத்தகைய குழுவினர் எட்டுவகைப்படுவர். அவர்கள் முற்காலத்திலும் தொண்டர் காலத்திலும், பிற்காலத்திலும் வாழலாம். உலகின் எப்பகுதியிலும் வாழலாம்.

3. சிவகணங்களே திருவாரூரில் பிறக்கின்றன என்ற நம்பிக்கையோடு, திருவாரூரில் பிறந்து சிவனை வணங்கும் அனைவரையும் நாமும் வணங்கலாம்.

4. தில்லையில் தீட்சிதர் குலத்தில் மற்றும் தில்லையிலேயே வாழ்ந்து நிருத்தர் கோவிலில் அகம்படித்தொண்டு செய்வோர் வணங்கத் தக்கோர்.

5. மூன்று வேளையும், ஆர்வமிகும் அன்போடு இறைத் திருமேனியைத்தீண்டி அபிஷேகம், அர்ச்சனை செய்வோர் போற்றத்தக்கவர்.

6. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிந்தால் அவர்களைப் போற்ற வேண்டும்.

7. முழுநீறு பூசிய புறக்கோலம் இருந்தாலும் அவர்தம் அகப்பண்பை ஆராய்ந்து அவர்களைப் பணிய வேண்டும்.

8. உலகின் பொய்ப் பொருளைத்தவிர்த்து இறைவனைப் பற்றி மட்டுமே நூல் செய்யும் புலவர்கள் வணங்கத்தக்கவர்கள்.

9. இறை புகழ் கூறும் பாடல்களைப்பக்தி உணர்வோடு பாடுவோரைப் பணிய வேண்டும்.

10. ஈசனைப் பணிவது போலவே ஈசனடியாரையும் பணிவோர் சிறந்த பக்தர்கள். அவர்களைப் போற்ற வேண்டும்.

---

28.04.2018 அன்று இலக்கியப்பூங்கா நிகழ்ச்சியில்

முனைவர். கரு. முத்தையா அவர்கள் தொகையடியார்

என்னும் தலைப்பில் சிறப்புரை ஆற்றினார்.

---

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

### அருட்புலம்பல்

பட்டினத்தார் இறைவன் தன்னை ஆட்கொண்டு அருளிய தன்மையைப் பலபடக் கூறி அவன் அருளித் தன்வடிவத்தைத் தனக்குக் காட்டிக் கள்ளத் தனமான ஐம்புலன்களையும் அவற்றால் உண்டாகும் தீமைகளையும் கூறிப் புலம்புகிறார். மேலும் தொடர்ந்து வரும் பிறவித்துயர் நீங்கக் காரணமான தன்மையைக் கூறுவதாகக் கீழ்வரும் கண்ணிகள் அமைந்துள்ளன. ஐங்கரனைத் தெண்டனின்டேன் அருளடைய வேண்டுமென்று தயங்காமல் வந்து ஒருவன் தன் சொரூபம் காட்டிஎனை

*கொள்ளைப் பிறப்(பு) அறுக்கக் கொண்டான் குருவடிவம்*
*கள்ளப் புலன் அறுக்கக் காரணமாய் வந்தானடி.*

இனியோகமுறை பற்றி ஆறு ஆதாரங்கள் பற்றியும் அவற்றால் உண்டாகும் ஒலிக்குறிப்புகள் ஐம்பத்தொன்றையும் பற்றிக் கூறுகிறார் பட்டினத்தார். திருமூலர் முதலான சித்தர்கள் இதனை விரிவாகப் பேசுகின்றனர். ஆதாரங்கள் 6- 1. மூலம் 2. தொப்புள் 3. மேல்வயிறு 4. நெஞ்சு 5. கழுத்து புருவநடு 6. டம்பம் (தற்பெருமை)

யோகமுறை என்பது பிராணவாயுவை (மூச்சுக்காற்றை) அடக்கப் பயிலும் பிராணாயாமம் பற்றிக் கூறுகிறார். இதனை வாசியோகம் என்று சித்தர்கள் குறிப்பிடுகின்றனர். இப்படி வாசியோகம் பயின்றவரின் வாழ்நாள் அதாவது ஆயுள் நீடிக்கும் என்பர். இதனைச் சாகாக் கலை என்று கூறுவர். மூச்சுக் காற்றினை வெளிவிடாது அடக்குதலே பிராணாயாமம் எனப்படும்.

உடம்பின் உள்ளே உள்ள உயிர்க்காற்றே பிராணன் எனப்படும். அது பாம்பு வடிவில் மூலாதாரத்தில் இருக்கும். மூலாதாரம் என்பது இடைக்குக் கீழும் குதத்திற்கு (ஆசனவாய்) மேலும் இருக்கும் வெப்பமான குண்டலினியைக் குறிக்கும். இந்தக் குண்டலினி மேலெழுந்து முதுகுத் தண்டின் வழியாகச் சென்று சுவாதிட்டனம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களைக் கடந்து தைல உச்சியை அடையும்; அதன் பின் உண்டாகும் ஒலி

அதிர்வுகளை ஒலியாகக் கொண்டு அவை ஐம்பத்தொன்று கணக்கிடுகின்றனர். 4-6-10-12-16-3 இவற்றின் கூட்டுத் தொகை 51 இதனையே ஐம்பத்தோர் அட்சரம் என்று கூறுகின்றனர். இந்த 51 ஒலி அதிர்வுகளையும் கடந்து சென்றபின் அருள்வெளி தோன்றும். இதனைத் தம்பலம் என்றும் சகஸ்தளம் என்று கூறுவர். இந்த ஆறு ஆதாரங்களையும் 51 எழுத்துக்களின் ஒலியதிர்வையும் கொண்ட என் உடலாகிய கோட்டையிலுள்ள குற்றங்;கள் அனைத்தையும் நீக்கிடச் செய்தான்.

*ஆதாரம் ஓர் ஆறும் ஐம்பத்தோர் அட்சரமும்*
*ஆதான கோட்டைஎல்லாம் சுட்டான் துரிசு அறவே*

மிகவும் வேறுபாடுகளை உணடாக்குகின்ற தத்துவங்கள் பல; அனைத்தும் தலை தெரியாமல் வெந்து போனது. தத்துவங்களின் எண்ணிக்கை 96. அவையாவன
1. ஆன்ம தத்துவங்கள் 24(2) உடலின் வாசல்கள் 9 (3) தாதுக்கள் 7(4) மண்டலங்கள் 3(5) குணங்கள் 3(6) மலங்கள் 3(7) வியாதிகள் 3(8) விகாரங்கள் 8(9) ஆதாரங்கள் 6(10) வாயுக்கள் 10(11) நாடிகள் 10(12) அவத்தைகள் 5(13) ஐயுடம்புகள் 5 இந்தத் தத்துவங்கள் அனைத்தும் தலைதடுமாறிப் போயின.

*மெத்த விகாரம் விளைக்கும் பலபலவாம்*
*தத்துவங்கள் எல்லாம் தலைகெட்டு வெந்ததடி*

என்னுடன் பிறந்தார் அனைவரும் இறந்து போனார்கள். இப்பொழுது தான் தன்னந்தனியனாய் இருக்கின்றேன். இவ்வாறிருக்க என்னால் இயலாது.

*என்னோடு உடன்பிறந்தார் எல்லாரும் பட்டார்கள்*
*தன்னந் தனியே தனித்திருக்க மாட்டேனடி*

அனைவரும் இறந்தநிலை என்று மாறும். அவற்றைச் சொல்லிச் சொல்லியே அழுதால்தான் என்னுடைய துன்பம் ஆறும்.

*எல்லாரும் பட்டகளம் என்று தொலையுமடி*
*சொல்லி அழுதால் துயரம் எனக்கு ஆறுமடி*

மண் தொடங்கி வருகின்ற ஆகாயம் நெருப்பு நீர் காற்று எனவரும் ஐம் பூதங்கள் அனைத்தும் செயலற்றுப் போகக் கண்டேன். தலை

முதல் தொடங்கி வரும் ஐந்து பொறிகளும் ஆற்றல் இழந்திடக் கண்டேன்.

*மண் முதலாம் ஐம்பூதம் மாண்டுவிழக் கண்டேண்டி*
*விண்முதலாம் ஐம்பொறிகள் வெந்துவிழக் கண்டேண்டி*

என்னைவிட்டு நீங்காத ஐம்புலன்களும் நீறாகி வெந்து போயின. சொல் முதலான ஐந்தறிவும் மாண்டு போகக் கண்டேன். (கண்டு கேட்டு உண்டு உயிர்த்தல் உணர்தல் ஆகியன ஐந்தறிவுகள்)

*நீங்காப் புலன் ஐந்தும் நீறாக வெந்ததடி*
*வாக்காதி ஐவரையும் மாண்டுவிழக் கண்டேண்டி*

மனம் முதலான அந்தக்கரணங்களான அத்தனையும் கூட்டத்தோடு எரிந்து சாம்பலாகக் கண்டேன்.

*மனக்கரணம் அத்தனையும் வைகவையே பட்டழிய*
*இனக்கரணத் தோடு எரிந்து விழக்கண்டேண்டி*

தத்துவங்கள் 36 என்பர். அவை உலகின் தோற்றம் அமைப்பு ஆகியவற்றை விளக்குவதாக அமையும். இவை பிரபஞ்சத்தின் மூலப்பொருள்கள். இவற்றை 4 என்றும் 36 என்றும் 96 என்றும் பலவகையாகக் கூறுகின்றனர். சாங்கிய யோகம் 24 தத்துவங்களைக் குறிக்கின்றது. சைவநெறி 6 தத்துவங்களைக் குறிக்கின்றது.

சிவதத்துவம் ஐந்து - வித்தியா தத்துவம் ஏழு - ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு. ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு. அவை

சிவதத்துவம் 5 - வித்தியா தத்துவம் 7 - ஆன்ம தத்துவம் 24 ஆன்மதத்துவத்தின் இருபத்து நான்கின் விளக்கம்.

மா பூதங்கள் ஐந்து - தன்மாத்திரைகள் ஐந்து - கன்மேந்திரியங்கள் ஐந்து - ஞானேந்திரியங்கள் ஐந்து - அந்தக்கரணங்கள் நான்கு ஆணவம் - கன்மம் - மாயை என்ற மும்மலங்களில் ஒன்று மாயை; அது, பதி என்ற இறைவனால் இயக்கப்படும் போது இந்த 36 தத்துவங்களாகத் தோன்றும். சுத்த மாயையில் இருந்து தோன்றும் ஐந்தையும் சிவதத்துவம் என்பர். அசுத்த மாயையில் இருந்து தோன்றும் ஏழையும் வித்தியா தத்துவம் என்பர். பிரகிருதி மாயையில் இருந்து தோன்றும் இருபத்து நான்கையும் ஆன்ம தத்துவம் என்பர்.

### சிவதத்துவம் ஐந்தின் விளக்கம்

நாதம் - தூய அறிவான பரம்பொருளின் முழுமையான நனவிலி நிலை இதுவே பரசிவம் எனப்படும். விந்து - சக்தி - இயக்கம் கிரியா சக்தி. இந்த இயக்கத்தாலேயே சிவத்துடன் சேர்ந்து ஏனைய தத்துவங்களை உண்டாக்கும். இறைவனின் திருவருட் சக்தியின் நிலை இதுவே. சாதாக்கியம் - சதாசிவனும் சிவசக்தியும் இணைவதால் செயலும் அறிவும் சமநிலையில் காணப்படும். இதன் மூலம் மற்ற தத்துவங்களின் தோற்றம் தூண்டப்படும். ஈசுரம் - மறைத்தற் சக்தியான மகேசுரன் செயலற்ற ஆன்மாக்களை மறைத்து உள்ளாக்கும் செயல். அதனிடையே இறையறிவும் இயங்குதல். சுத்த வித்தை - ஆக்கல் - காத்தல் - அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் அடிப்படையான இறைத்தத்துவம். இந்த இறையறிவு முழுமையாகச் செயற்படச் செயல் (கிரியா சக்தி) பின்னணியில் இயங்கும்.

### வித்தியா தத்துவம்

அசுத்த மாயையில் இருந்து தோன்றிச் செயலற்ற ஆன்மாக்களைச் செய்யச் செய்யும் கருவிகளே வித்தியா தத்துவங்கள்.

அவை - காலம் - நியதி - கலை - வித்தை - இராகம் - மாயம் ஆகிய இவற்றுடன் ஆன்மா (புருடன்) ஒன்றாகி வித்தியா தத்துவம் ஏழு ஆகின்றது.

### ஆன்ம தத்துவம் 24

இந்த இருபத்து நான்கு ஆன்ம தத்துவங்களும் உலகத்திற்கும் உயிர்களுக்கும் அடிப்படை. சிவதத்துவத்தால் வித்தியா தத்துவம் தூண்டப்படும். ஆன்மா இயங்குவதற்கான கருவிகள் தரப்பட்டால் மட்டும் போதாது. அவ்விதம் இயக்கக் காரணமான பௌதிக உடலையும் அதைச் சார்ந்த பொறிகளும் மற்றும் ஒன்பது கருவிகளும் வேறு வேறு குழுக்களாகப் பிரிந்து ஆன்ம தத்துவத்தில் அடங்கும்.

மா பூதங்கள் ஐந்து - நிலம் - காற்று - நீர் - நெருப்பு - ஆகாயம்

தன் மாத்திரைகள் ஐந்து - சுவை - ஒளி - ஊறு (தொடுதல்) ஓசை - நாற்றம் (மணம்)

கன் மேந்திரியம் ஐந்து - பற்றுதல் (பாணி) பதித்தல் (பாதல்) படைத்தல் (உனத்தம்) வாக்கு - கழித்தல் (பாயு)

மனித உடல் செய்யும் ஐந்தொழில்களும் கன்மேந்திரியங்களாகும். பற்றும் செயல் கைகளுக்கு உரியது. பதித்தல் அதாவது பாதத்தின் தொழில் கால்களுக்கு உரியது. படைத்தல் மூளைக்கு உரியது. வாக்கு நாவின் செயல். அங்கங்கள் அனைத்தும் கழித்தலைச் செய்யும். இவை ஐந்தும் ஆன்மா உடலில் இயங்க அவசியம் ஆகும்.

ஞானேந்திரியங்கள் ஐந்து – மெய் – வாய் – கண் – மூக்கு – செவி ஆகிய ஐம் பொறிகளும் ஒன்றோடொன்று இணைந்து செயலாற்றுவதாலேயே உயிர்கள் அறிவைப் பகுத்தறிந்து மேனிலையை அடைகின்றன.

அந்தக் கரணங்கள் நான்கு – மனம் – புத்தி – அகங்காரம் – சித்தம், இவை நான்கும் சித்தத்தைப் பிரகிருதி என்று அழைக்கும். ஆகவே சித்தத்தை முதலாகக் கொண்ட 24 தத்துவங்களும் ஒன்று சேரும் போதில் தத்துவங்களுடன் இணைந்து இப்பௌதிக உலகில் செயலாற்றத் தொடங்குகின்றது.

ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்றையும் முப்பத்தாறு தத்துவங்களையும் மூலாதாரம் சுவாதிஸ்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களையும் அவை அழியும்படியாக அவற்றை வேரோடு அறுத்தான்.

மேலே கூறிய கருத்துக்களை உள்ளடக்கிக் கீழ்வரும் பாடல் வரிகள் விளக்குகின்றன.

*ஆத்துமத் தத்துவங்கள் அடுக்குஅழிய வெந்ததடி*
*போற்றும்வகை எப்படியோ போதம் இழந்தானை*
*வித்தியா தத்துவங்கள் வெந்துவிழக் கண்டேண்டி*
*சுத்தவித்தை ஐந்தினையும் சுட்டான் துரி(சு) அறவே*
*மூன்று வகைக்கிளையும் முப்பத்தா(று) அறுவரையும்*
*கான்றுவிழச் சுட்டுக் கருவேர் அறுத்தாண்டி*

எனக்கு ஞானோபதேசம் செய்கின்ற குருவாகி வந்தானோ? என்பால் உள்ள குற்றங்களை நீக்கிட வந்தானோ? அதற்காக அவனே உருவெடுத்து என் உருவை மாற்றிட வந்தானோ? (மருதவாணர் ஒரு குழந்தையாகிப் பட்டினத்தார் முன் தோன்றிய வரலாறு)
எனக்கு வரும் கேடு இன்னதென்று நான் அறியவில்லை. ஆதலால்

கெட்ட அறிவு தோன்றாமல் காத்திடு. உலக வாழ்வில் துன்பம் வரும் என்று அறியாமல் இருந்தேன். அதனால் பதியாகிய இறைவன் என்னை ஆண்டு கொண்டான்.

*குருவாகி வந்தானோ குலம் அறுக்க வந்தானோ*
*உருவாகி வந்தானோ உருஅழிக்க வந்தானோ*
*கேடுவரும் என்றறியேன் கெடுமதிகள் தோன்றாமல்*
*பாடுவரும் என்றறியேன் பதியாண்டு இருந்தேண்டி*

இவ்வுலகில் தோன்றிய அனைவரும் பட்ட இடம் இன்னதென்று நான் அறியேன். பொல்லாங்கைப் போக்கும் பொறியற்ற தன்மையைக் கண்டேன்.

*எல்லாரும் பட்டகளம் இன்னஇடம் நானறியேன்*
*பொல்லாங்கு தீர்க்கும் பொறியிலியைக் கண்டேண்டி*

என் உடலாகிய அதாவது உள்ளமாகிய கோட்டைக்குள் இருந்த தீயவைகள் ஒரு சேரமடிந்தன. அந்தக் கோட்டைக்குள் இருந்த ஆறறிவும் அழிந்தது. கற்கோட்டை போலிருந்த இந்த உடல் கரியாகிப் போனது. (உயிர் போனபின் உறவினர் கூடி இவ்வுடலுக்கு எரியூட்டிடுவர். இறுதியில் மிஞ்சுவது ஒரு பிடி சாம்பலே என்ற கருத்து இங்குச் சுட்டிக் காட்டப் பெறுகிறது.

*உட்கோட்டைக்கு உள்ளிருந்தார் ஒக்க மடிந்தார்கள்*
*அக்கோட்டைக்கு உள்ளிருந்தார் அறுபதுபேர் பட்டார்கள்*

ஒக்க மடிந்ததடி ஊடுருவ வெந்ததடி கற்கோட்டை எல்லாம் கரிக்கோட்டை ஆச்சுதடி; கீழ்வரும் தொண்ணூற்றாறு என்பது தொடர்பான தத்துவங்கள் பற்றிய விளக்கம் மேற்கண்ட பகுதியில் விளக்கப் பெற்றுள்ளது. அறுவர் என்பது மூலாதாரம் சுவாதிஸ்டானம் மணிபூரகம் அநாகதம் விசுக்தி ஆக்ஞை என்ற ஆறு மூலாதாரங்களைக் குறிக்கும். ஆறு ஆதாரங்களையும் மேற் கூறிய தொண்ணூற்றாறு தத்துவங்களையும் அவற்றின் குற்றங்கள் நீங்கும்படியாக வேரோடு அழித்தான். அதனால் ஞானம் பெற்ற என்மேல் கண்ணேறு பட்டது. அதன் வழி நான் மறுபடி ஒரு தாயின் கருவில் செல்லாதபடி ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களையும் அவை அழியும்படியாக அவற்றை வேரோடு அறுத்தான்; நீக்கினான்.

தொண்ணூற்று அறுவரையும் சுட்டான் துரிசு அறவே கண்ணேறு பட்டதடி கருவேர் அறுத்தாண்டி; ஓம் என்ற இந்த ஒலிபிரணவம் என்று சொல்லப் பெறுகின்றது. இது வேதங்கள் அனைத்திற்கும் மூல மந்திரம். இறைவனை அம்மை அப்பனாக உணர்த்தும் ஒலி வடிவம் ஓம் எனப்படும். ஓ என்ற ஓரெழுத்து இன்னிசைக்காக மகர ஈறு சேர்க்கப் பெற்று ஓம் என்றானது. இந்த ஓங்கார ஒலியானது என்னிடம் இருந்து வெளிப்படாமல் கெட்டது. அதனால் என்னிடம் உள்ளவை அனைத்தும் போயின. அவற்றை அடியோடு நீக்கிவிட்டான் இறைவன். அதனால் நான் கொண்ட ஆங்காரமாகிய ஆணவத்தையும் அடியோடு நீக்கி விட்டான்.

*ஓங்காரம் கெட்டதடி உள்ளதெலாம் போச்சுதடி*
*ஆங்காரம் கெட்டதடி அடியோடு அறுத்தாண்டி*

நாம் நிற்பதற்குரிய இடம் தரை. நாம் பிறப்பதற்காகத் தங்கியுள்ள தாயின் கருப்பை உயிர்களுக்குத் தடையாகும். அந்தக் குடிலாகிய குடிசையில் இருந்து வரும் நம்முருவை மாற்றி நீக்கினான். பிறவிப் பிணியைப் போக்கினான் என்பது பொருள். இவை ஒலிப்பதால் வரும் துன்பங்களை நீக்கினான்.

*தரையாகும் குடிலைமுதல் தட்டுருவம் வெந்ததடி*
*இரையும்மனத்து இடும்பையெலாம் அறுத்தாண்டி*

*(தொடரும்...)*

## பட்டினத்தார் பைந்தமிழ் - 15

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

இருவேறு உலகத்து இயற்கை திருவேறு தெள்ளியர் ஆதலும் வேறு. (374) என்பது அய்யன் திருவள்ளுவரின் ஊழ்வினைக் கோட்பாடு. ஊழின் காரணமாக உலகத்தின் இயல்பு இருவேறு வகைப்படும். ஊழின் காரணமாகத் திருவுடையவர் ஒரு பிரிவினர். அதே ஊழின் காரணமாக அறிவுடையவர் மற்றொரு பிரிவினர். ஊழ் என்ற நேர்கோட்டில் நல்லது கெட்டது அமைந்தாலும் மற்றொன்று சூழினும் அவ்வூழே முற்றும் என்பதற்கு இணையாகத்

*தெய்வத்தான் ஆகா(து) எனினும் முயற்சிதன்*
*"மெய்வருத்தக் கூலி தரும்"*

எனப்பட்டதால் வருவது வரட்டும் என்ற எதிர்நீச்சலோடு வாழ நம்பிக்கையூட்டும் வாசகந்தான் உலகை உய்ப்பித்துக் கொண்டிருக்கின்றது. இந்தக் கொள்கைக்கு அரணாகப் பட்டினத்தாரின் கருத்து ஆன்மீகத் தளத்தின் ஆக்க வாசகமாகப் பூக்கிறது. அது தான்

*உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?*
*கழப்பின் வாராக்கையற(வு) உளவோ?*

என்ற திருவிடை மருதூர் மும்மணிக் கோவையின் வாசகம்.

முயற்சியால் கிடைக்காத நன்மைகள் இல்லை. அவ்வாறே சோம்பலால் வாராத துன்பங்கள் இல்லை என்பது பட்டினத்தாரின் பாடற் பொருள். உழப்பு - முயற்சி. கழப்பு - முயற்சி இன்மையான சோம்பல். இவை இரண்டும் வாழ்வின் எதிர்மறையான கூறுகள். இருப்பினும் வாழ்க்கைப் பயணத்தின் வழிகாட்டியாக இருப்பது மனந்தான் என்பதால் பட்டினத்தாரின் மனத்தை முன்னிலைப்படுத்தி அதை ஒரு காடாக உருவகப்படுத்தி ஆன்மீக விளைச்சலை அறுவடை செய்வதை மும்மணிக் கோவையின் பத்தாம் பாடல் வழி மனம் என்பது ஒரு புனம் (காடு). அதை உழுது பக்குவப்படுத்திப் பயிர் செய்வதும் பாழாக்குவதும் அவரவரின் செயல்பாட்டைப் பொறுத்ததாகக் கூறுகிறார். மனம் ஒரு தரிசு நிலம். அதில் வேர் பிடித்த வஞ்சகக் கட்டைகள் வளர்ந்துள்ளன. அவற்றை அறிவு என்னும் உழுபடையால் உழுது போக்கி அப்புறப்படுத்தப் பட்டபின் பயிர்வளர்வதற்கு உரிய அன்பால் வரம்பு கோலி உணர்வு என்கின்ற எருவினைத் தூவ வேண்டும். பின் இடைவிடாத பக்தி என்கின்ற நீரைப் பாய்ச்சி ஆர்வம் என்கின்ற விதையை முளைக்கச் செய்யும் போது எதற்கும் அடங்காதபட்டிக்கடாப் போன்ற ஐம்புலக் காளைகளால் முளைக்கும் பயிருக்குத் துன்பம் வாராதபடி பொறுமை என்னும் வேலி அமைத்தால் சிவஞான உணர்வென்னும் முளை முளைக்கும். முளைக்கும் சிவஞானப் பயிரோடே விதைக்கப்படாமல் முளைக்கும் காமம் வெகுளி போன்ற களைகளைக் கொட்டால் (களை எடுக்கும் கருவி) பிடிங்கிப் படுத்தப்பட்ட அந்நன்செய் நிலத்தில் சிவபுண்ணிய மெய்ப்பாடாகிய

அருள் துளிர்க்கும். அதுவே திருவைந் தெழுத்தான பூவாய்ப் பூத்துக் காயாய்த் தோன்றும். அக்காயே ஒப்பற்ற எண்தோளும் முக்கண்ணும் நஞ்சுண்ட கண்டமும் சிவனது சொரூபமான திருநீற்றுப் பொலிவுடன் கூடிய மணமும் இனிமையும் பொருந்திய நனிமிகு கனியாய் மாணிக்கத் தீங்கனி தரும் மருதவாணக் கற்பகத் தருவாய் முளைக்கும். இம் மருதவாணத் தீங்கனியே சிவனடியார்கள் உண்ணும் ஆன்மீகப் பிரசாதமாகும் என்கிறார் பட்டினத்தார். இத்தகைய சிவபுண்ணிய விளைச்சலுக்கு மனத்தை நன்றாக உழ வேண்டும். பாடுபட்டால் பலன் உண்டு என்பதற்கேற்ப நல்ல அறுவடையால் சிறப்படைவது போல ஆன்மீக வாழ்வில் செம்மாந்திருக்கலாம் என்று பட்டினத்தார் ஊக்கம் தருகின்றார். இப்படியான ஆன்மீக வயலின் விளைச்சல் பயனை மாணிக்கத் தீங்கனி என்ற அறுவடைப் பொருளாகப் பட்டினத்தார் கூறுவது சிந்தனைக்கு விருந்தாக உள்ளது. இறைவனே மாணிக்கத் தீங்கனி. மாணிக்கம் செந்நிறமானது. அது போலச் சிவனும் செக்கர் மேனியன். அவன் கனி போன்றவன் என்பதால் காணும் கண்ணுக்குக் காட்சியளவில் இறைவன் செந்நிற அழகுடையவனாயினும் நாவால் ஏத்துதற்குரிய சுவையாகவும் உள்ளவன் என்பதை உணர்த்தவே தீங்கனி எனப்பட்டது.

இறைவன் கனிபோன்று இனியவன். கனியினும் கட்டிபட்ட கரும் பினும் என்றே அப்பரடிகள் திருவிடை மருதூர் மருதவாணரைத் துதிக்கின்றார். அத்தொடர்பினாலேயே பட்டினத்தாரும் தீங்கனி என்றார். விலையுயர்ந்த மாணிக்கம் போல இறைவனும் மிக உயர்ந்தவன். மேலும் கனி போலச் சுவைத்தற்கும் உரியவன். எவ்வாறெனில் மாணிக்கப்பரல் போன்ற செந்நிற விதைகளைக் கொண்ட மாதுளம் பழம் போன்றவன் சிவன் என்ற கருத்தால் மாதுளை முத்துக்கள் உண்பதற்கு உரியன போலச் சிவனும் தித்திப்பானவன் என்பது கருத்து. தேனாய் இன்னமுதமாய்த் தித்திக்கும் சிவபெருமான் என்பது மாணிக்க வாசகர் வாக்கு. நமச்சிவாயப் பழம் தித்திக்கக் கண்டேன் என்பது திருமூலர் வாக்கு.

இவ்வருளாளர்களின் வழிவந்த பட்டினத்தார் மாணிக்கத் தீங்கனி எனக் கூறினார். நாச்சுவை சிறிது பொழுதே இருக்கும் பின் மறைந்து

விடும். ஆனால் மருதவாணத் தீங்கனியோ நினைத்தாலே இனிக்கும் என்பதோடே நினைக்க இனிக்கும் என்பதால் இனிது இனிது அருந்தும் கனியாக அடுக்கிக் கூறப்பட்டது. ஆகத் தீங்கனியை விளைவித்து உண்ணும் வாழ்க்கைக்கு மாறானது புன்செய் விளைச்சலைக் செய்து பாழாகும் வாழ்க்கை என்பதைப் பட்டினத்தார் தொடர்ந்து கீழ்வருமாறு கூறுகிறார்.

*மனமெனும் புனத்தை வெறும்பாழ் ஆக்கிக்*
*காமக் காடு மூடித் தீமைசெய்*
*ஐம்புல வேடர் ஆறலைத்(து) ஓடக்*
*கல்லா உணர்(வு) எனும் புல்வாய் அலமற*
*விச்சைவித்(து) உதிர்த்துழி யான்எனப் பெயரிய*
*நச்சு மாமரம் நனிமிக முளைத்துப்*
*பொய்என் கவடுகள் போக்கிச் செய்யும்*
*பாவப் பல்தழை பரப்பிப் பூஎனக்*
*கொடுமை அரும்பிக் கடுமை மலர்ந்து*
*துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு*
*மரணம் பழுத்து நரகிடை வீழ்ந்து*
*தமக்கும் பிறர்க்கும் உதவாது*
*இமைப்பிற் கழியும் இயற்கையோர் உடைத்தே!*

தீவினையாளர்கள் தங்களைத் தாங்களே கீழ்மைப் படுத்திக் கொள்வதைப் பட்டினத்தார் மனம் என்னும் நிலத்தில் தீயதை விதைத்து அறுவடை செய்வதைக் கூறி அத்தகையோர்க்கு மனம் இரங்குகின்றார். மனம் என்னும் நல்ல நிலத்தை உழுது பயிர் செய்யாமல் காடு மண்டியதாக வெறி மேலிட்டு விடுவதைக் கூறும் போது பயிர் செய்யப்படாத நிலத்தைக் காமக் குரோத மூடர்கள் தமக்கு உரியதாக்கிக் கொள்வர். ஆணவச் செடி கொடி மண்டும். ஐம்பொறி வேடர்கள் வழிப்பறிக் கொள்ளையராய் வாழும் இடமாகி விடும். பேய்த்தேர் போல மயக்கம் தரும் நிலையில் மான் போன்ற விலங்குகள் சுற்றித் திரியும் இடமாய் நச்சு மரங்கள் கிளைவிட்டு வளர்ந்து கொடுமை என்னும் அரும்பு பூகாய் கனிகள் தரும்படியாய் மக்களை நரகில் வீழ்த்தும் பயனற்ற நிழல் தரும் மரம் வளர்ந்து காடாகி விடும் என்பதால்

அத்தகு பயன்படா வாழ்வில் என்ன பயன்? எனப் பட்டினத்தார் நல்லதைவிட்டுத் தீமையை நாடுவோர்க்காக நொந்து பாடுகிறார். பட்டினத்தாரின் இந்தத் திருமுறைப் பாடலுக் கேற்பப் பிற்காலத்தில் உருவான சாத்திர நூலான சிவஞான சித்தியாரில் சித்தாந்தத்தே சிவன் திருக்கண் சேர்த்திச் சீவன் மலங்கழுவி வரும் பிறப்பை அறுத்து முத்தாந்தப் பாத மலர்க்கீழ் வைப்பன். உலகர் எல்லாம் மூர்க்கராகிப் பெரும் பிதற்றுப் பிதற்றிப் பாவப் பெருங்குழியில் விழுந்திடுவர். இது என்ன பிராந்தி? எனக் கூறப்பட்டுள்ளது. எனவே மனத்தைச் செம்மைப் படுத்தி நல்லதன் தன்மையையே எண்ணினால் ஆன்மா முத்திப் பேற்றை எளிதில் அடையும் என்பது பட்டினத்தாரின் வேண்டுகோளாகும். இதனை அடுத்தொரு பாடலில் கட்டளை வாக்கிய மாகவே பாடுகிறார்.

*காணீர்! கதியொன்றும் கல்லீர் எழுத்தஞ்சும் வல்ல வண்ணம்*
*பேணீர்! திருப்பணி யேசீர் அவன்புகழ் ஆசைப்பட்டுப்*
*பூணீர்! உருத்திர சாதனம்! நீறு எங்கும் பூசு கிலீர்*
*வீணீர் எளிதோ? மருதப் பிரான்கழல் மேவுதற்கே!*

இப்பாடலால் ஆன்மா ஈடேறவேண்டுமே என்ற அக்கறையோடு பாடப் பட்டதாகத் தெரிகின்றது. ஆக ஆன்ம ஈடேற்றத்திற்கு ஆன்மாவின் முயற்சியே வேண்டும்; அங்ஙனம் முயன்று முன்னேறினால் திருவிடை மருதூர்ப் பெருமானின் திருவருள் கைவந்து கிடைக்குமாம். அதனால் இதுவரை தான் நிற்கும் காலடியின் நிழல் தனக்குத் தெரியாதது போலிருந்த மாயப்படலம் கிழித் தெறியப்படும் போது என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன் நின்னிலே அனைத்தையும் கண்டேன் எனப் பூரிக்கும் பட்டினத்தார் என்னை நினைக்காணா மாந்தர் என உலகோர்க்காகக் கவல்கின்றார். இத்தகைய ஆன்மாவின் மயக்கநிலை பற்றியதை அடுத்த பாடலில் பட்டினத்தார் சில உவமைகள் வழி கூறுவதைக் காண்போமாக!

## கந்தபுராணத்தில் உபதேசங்கள்

(ஸ்ரீ. இரவிச்சந்திரன், தமிழாசிரியர், கோவிலூர் மடாலய வேதாந்த மாணவர்)

கதையும் தத்துவமும் கலந்த காவியமான கந்தபுராணத்தில் நான்கு உபதேசங்கள் இடம்பெறுகின்றன. அவற்றுள் ஒன்று பிரமன்

தக்கனுக்குச் செய்த உபதேசம். பிரமனின் பத்துப் புதல்வர்களுள் அறிவாளியான தக்கன், முழுமுதற் கடவுளை நோக்கித் தவம்செய்யும் நோக்கத்தோடு சத்தியலோகத்தில் இருக்கும் தன் தந்தையைக் காண வருகிறான். முறைப்படி தந்தையை வணங்கிவிட்டுத் தன் மனதிலுள்ள ஐயங்களை வினாக்களாகக் கேட்கிறான். அவன் கேட்ட வினாக்களுக்குத் தக்கன் கூறிய விடைகளே உபதேசமாக மலர்கிறது. இவ்வுபதேசம் சைவசித்தாந்தத்தில் பதியிலக்கணத்தின் பிழிவாகக் கருதப்படுகிறது.

**பிரமன் தக்கனுக்குச் செய்த உபதேசம்**

தக்கன் வினவிய மூன்று வினாக்கள் :

1. மும்மூர்த்திகளில் முதல்வராகவும் முடிவில்லா ஒருவராகவும் விளங்குபவர் யார்?
2. படைத்தல், காத்தல் ஆகிய இருதொழில்கள் செய்பவர்களிருக்க அழிக்கும் கடவுள் முதல்வராவது எவ்விதம்?
3. வேதங்கள் சிவபெருமான் அருளியதாயின் அது ஏன் தேவர்களையும், அனைத்து உயிர்களையும், ஐம்பூதங்களையும் பிரமம் என்று கூறுகிறது?

**பிரமன் கூறிய விடைகள் :**

**மும்மூர்த்திகளுக்கும் முதல்வர் சிவபெருமானே!**

மைந்தனே! ஒருமுறை நானும் திருமாலும் எங்களுக்குள் யார் முழுமுதற் கடவுள் என்று நிச்சயித்துக் கொள்ளும் பொருட்டுப் போரிட்டோம். அப்போது எங்கள் இருவருக்கும் நடுவே பரம்பொருள் ஒரு தீப்பிழம்பாகத் தோன்றி வானளாவி நின்றது. பிறகுதான் அந்தப் பரம்பொருள் சிவபெருமான் என்று தெரிந்துகொண்டோம். இந்த நிகழ்ச்சியிலிருந்து சிவபெருமானே மும்மூர்த்திகளில் முதல்வர் என்றும், முழுமுதற் கடவுளாக இருப்பவரும் முடிவில்லா ஒருவராக இருப்பவரும் அவரே என்றும் தெளிவாக அறிந்து கொள்வாயாக.

**பிரமனும் திருமாலும் சிவபெருமானின் சேவகர்களே :**

தக்கனே, பிரமன் திருமால் ஆகிய எங்களையும் இவ்வுலகத்திலுள்ள அனைத்து உயிர்களையும் சங்கார காலத்தில் ஒடுக்குபவர் சிவபெருமானே. அவ்வாறு ஒடுக்கியபின் மீண்டும் படைப்புக் காலத்தில் முதலில் எங்களைத் தமது தோள்களிலிருந்து

படைக்கிறார். அதன்பிறகு எங்களை விட்டு நீங்காமல் எங்கள் உயிருக்கு உயிராய் இருந்து அவரே எங்கள் மூலமாகப் படைத்தல் காத்தல் தொழில்களை மேற்கொள்கிறார். காமம் வெகுளி மயக்கத்தால் நாங்கள் மயங்கும் போது, அம்மயக்கத்தைப் போக்கி அருள்கிறார். அதுமட்டுமின்றி உருத்திரராகித் தாமே அழித்தல் தொழிலையும் மேற்கொண்டு எங்கள் வரிசையிலும் ஒருவராக இருக்கிறார்.

எள்ளில் எண்ணெய்யைப் போலவும் மணியிலே ஓசையைப் போலவும் மலரிலே மணத்தைப் போலவும் இரத்தினத்திலே ஒளியைப்போலவும் உலகின் உள்ளும் புறமுமாகி ஒருமைப்பட்டு நிற்கும் அவர்தான், எங்களுக்கு வேதங்களையும் வியன்கலைகளையும் ஓதியருளினார். அவர் ஓதியருளியதால்தான் நாங்கள் வேதங்களை உணர்ந்தோம்.

**வேதங்கள் கூறும் உண்மையுரையும் புகழுரையும் :**

வேதங்கள் சிலவற்றை உண்மையுரையாகக் கூறும்; சிலவற்றைப் புகழுரையாகக் கூறும். மேலோட்டமாகப் பார்த்தால் இரண்டும் ஒன்று போலவே தோன்றும். அந்தப்படிதான் வேதங்கள் அனைத்தையும் பிரமம் என்று கூறுவதும். சிவபெருமானை, பரப்பிரமம் என்று கூறுவதும் மட்டுமே உண்மையுரை; மற்ற எல்லாவற்றையும் பிரமம் என்று கூறுவது புகழுரை.

ஆறுகளெல்லாம் இறுதியில் கடலைச் சென்று அடைவது போல மற்ற தெய்வங்களுக்குச் செய்யும் வணக்கமும் புகழுரையும் சிவபெருமானையே சென்று சேரும்.

**வேதங்கள் கூறும் சிவபெருமானைப் பற்றிய ஆணை மொழிகள் :**

உயிர்கள் அனைத்தையும் படைத்துக் காத்து ஒடுக்கி, ஒடுக்கியபடியே மீண்டும் படைத்துக் காத்து, பக்குவமடைந்ததும் ஆட்கொள்பவன் சிவபெருமானே! அருவம் உருவம் அருவுருவம் ஆகிய மூன்று வடிவங்களாக உள்ளவனும் அவனே. ஆதி அந்தம் இல்லாதவனும், அறிவதற்கரிய ஒளியாகவும், எங்கும் உள்ள சித்துப் பொருளாகவும் உள்ளவனும் அவனே! உயிருக்கு உயிராய் நீங்காமல் இருந்து ஐந்தொழில்களை ஆற்றுபவனும் அவனே!

ஆண் பெண் அலி என்ற மூன்று தன்மைகள் அல்லாதவனாய் இருப்பவனும், அயன் மாலால் அறிய முடியாதவனாய் இருப்பவனும் அவனே! உடலெடுத்த உயிர்கள் அனைத்தையும் தன் உயர்குணத்தில் ஒடுங்கச் செய்பவனும், தானே யாவருக்கும் புகலிடமாக இருப்பவனும், தான் அவர்களின் மாயா குணங்களில் கலவாமல் இருப்பவனும் அவனே!

**பிரமன், திருமாலை எவ்வாறு வணங்க வேண்டும்?**

சிவபெருமானைப் புகழ்ந்துரைப்பது போல இந்திரனையும் என்னையும் திருமாலையும் வேதங்கள் புகழ்ந்துரைக்கவில்லை. அப்படிப் புகழ்ந்துரைத்தாலும் அது உயர்வு நவிற்சியே. வேதங்களின் பாதிப்பகுதி சிவபெருமானைப் புகழ்வதுதான். மீதிப்பகுதிதான் மற்ற அனைவருக்குமானது. இது பாரபட்சமல்ல! உண்மை. ஏனென்றால் சிவபெருமான் மட்டுமே பதி; நாங்கள் உட்பட அனைத்து உயிர்களும் பாசத்தில் கட்டுண்டு உழலும் பசுக்கள்தான். இந்த உண்மையை அறிய விரும்பினால் சிவாலயங்கள் தோறும் நாங்கள் சிவபெருமானை வணங்கும் காட்சியைக் காணலாம்.

எனவே சிவபெருமானுக்குச் சமமாக எங்களை வணங்கிச் சிறப்புச் செய்தால், அவ்வாறு வணங்குபவர்களுக்கு நரகமே கிடைக்கும். அவர்களுக்கு மட்டுமல்லாமல் எங்களுக்கும் நரகமே கிடைக்கும். அப்படியானால் எங்களை எவ்வாறு வணங்க வேண்டும்? நாங்கள் இருவரும் சிவபெருமானுக்குத் தொண்டு செய்பவர்கள் என்று நினைத்து எங்களை வணங்க வேண்டும். அவ்வாறு வணங்குபவர்களையே நாங்கள் அன்பராகக் கருதி வரமருளுவோம். மற்றவர்களைப் பகைவர்களாகவே கருதுவோம்.

**சிவபெருமானையே நீ அடைவாயாக :**

சிவபெருமான் மட்டுமே வீடுபேற்றை அளிக்கக் கூடியவன். அவன் துணையில்லாமல் வீடுபேற்றை அடைவோம் என்பது ஆகாயத்தின் தோலை உரித்து ஆடையாக அணிந்து கொள்வோம் என்பதைப் போன்றது.

***அவனருள் பெறாது முத்தி அடைந்தனர் இல்லை அல்லால்***
***அவனருள் இன்றி வாழும் அமரரும் யாரும் இல்லை***

*அவனருள் எய்தின் எய்தா அரும்பொருள் இல்லை ஆணை அவனலது இறைவன் இல்லை அவனைநீ அடைதி.*

பிரமன் தன் உபதேசத்தை சிவனே யார்க்கும் மேலவன் தெளிநீ என்று தொடங்கி, அவனலது இறைவன் இல்லை அவனை நீ அடைதி என்று நிறைவு செய்கிறான்.

## 2017 - 2018 ஆம் கல்வியாண்டு இராமசாமி தமிழ்க் கல்லூரி நாட்டு நலப்பணித்திட்டமும் கோவிலூர்த் திருமடமும்

(முனைவர் இரா.கீதா. இராமசாமி தமிழ்க்கல்லூரி)

இவ்வாண்டு (2017 - 18) இராமசாமி தமிழ்க் கல்லூரியின் நாட்டு நலப்பணித்திட்டமானது கோவிலூரில் திருமடத்தின் பேருதவியுடனும், சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் ஆசியுடனும் மிகச் சீரிய முறையில் நடந்தேறியது. இச்சீரிய பணிக்குப் பேருதவியாக இருந்த கோவிலூர் மடத்தின் சிறப்புக்களையும், இராமசாமி தமிழ்க் கல்லூரியின் நாட்டு நலப்பணித்திட்டத்தின் சீரிய பணியினையும் விளக்கும் வகையில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

**கோவிலூர்த் திருமடம் :**

இருநூறு ஆண்டுகாலப் பழமைமிக்க இம்மடம் கோவிலூர் ஆண்டவர் அவர்களால் தொடங்கப் பெற்றுச் சீருடன் வளர்ந்துள்ளது. பொதுச் சேவையும், கல்வித் தொண்டும் இம்மடத்தின் இரு கண்கள். அமைதி ஆன்மிகம் இயற்கை நிறைந்த இருப்பிடம் இவையனைத்தும் இங்கு நிரந்தரம்; கொற்றவாளீஸ்வரர், திருநெல்லையம்மனின் அருளால் நலமும் வளமும் பெற்றுத் திகழும் இவ்வூர் ஓர் ஆன்மிக பூமி; இவ்வூரில் அமைந்திருக்கும் இம்மடத்தின் தொண்டு அளப்பரியது.

**கோவிலூரில் இராமசாமி தமிழ்க் கல்லூரியின் நாட்டு நலப்பணித் திட்டம் :**

2017 - 18 ஆம் கல்வியாண்டில் இராமசாமி தமிழ்க் கல்லூரியின் நாட்டு நலப்பணித்திட்டமானது கோவிலூர் கிராமத்தில் நடைபெற்றது. கோவிலூர் மடமும், கோவிலூர் ஊராட்சியும் உதவிகள் பல புரிந்தன தங்கும் விடுதி, பாதுகாப்பு, உணவு ஏற்பாடு போன்ற பல உதவிகளைச் செய்தனர். கொற்றவாளீஸ்வரர், திருநெல்லையம்மனின் அருளோடும்

சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் ஆசியோடும் 10.03.2018 சனிக்கிழமை நாட்டு நலப்பணித்திட்ட சிறப்பு முகாம் இனிதே துவங்கியது.

**திட்டப் பணிகள் :**

10.03.2018 ஆம் நாள் சனிக்கிழமையன்று தங்கும் திருமண மண்டபத்தினைக் கூட்டி நீரூற்றிக் கழுவித் தூய்மை செய்தனர். 11.03.2018 ஆம் நாள் ஞாயிறு காலை முகாமின் முதல் நாள் பணிகளாக விடுதி முன்பு, கொற்றாளீஸ்வரர் கோவில் முன்பு எம் கல்லூரி மாணவர்கள் குப்பைகளைக் கூட்டித் தூய்மைப்படுத்தினர். 12.03.2018 ஆம் நாள் கோவிலூர் திருமட முக்கிய வளைவு வீதியினை இருபுறமும் உள்ள குப்பைகள் சுத்தம் செய்யப்பட்டன. செடிகள் வெட்டப்பட்டு எரியூட்டப்பட்டன. 13.03.2018 ஆம் நாள் செவ்வாய்க் கிழமையன்று காலை திருமடத்தின் முன்பு குளக்கரையின் ஓரம் உள்ள குப்பைகளைக் கூட்டி எரியூட்டப்பட்டன. மேலும் கோவிலூர் பேருந்து நிறுத்தம் அருகே மரக்கன்றுகள் நட்டு வேலி அமைத்துப் பாதுகாக்கப்பட்டன.

14.03.2018 ஆம் நாள் புதன் கிழமையன்று கொற்றவாளீஸ்வரர் கோவிலின் உட்புறத்தினை மாணவிகள் கூட்டிச் சுத்தம் செய்தனர்; மாலை 4.00 மணியளவில் கோவிலில் நடந்த பிரதோசத்திலும் மாணவிகள் கலந்து கொண்டு கொற்றவாளீஸ்வரர் திருநெல்லையம்மனின் அருளினைப் பெற்றனர். 15.03.2018 ஆம் நாள் வியாழக்கிழமை காலை திருமடத்தை மாணவிகள் கூட்டிச் சுத்தம் செய்தனர். அன்று நகரத்தார் பெருமக்களின் கலைப் பண்பாட்டையும், கோவிலூர் ஆண்டவரின் திருத்தொண்டையும் விளக்கும் வகையிலமைந்த அருங்காட்சியகத்தைச் சுற்றிப் பார்த்து வியந்தனர். உலகம் போற்றும் கலைப் பொக்கிசங்கள் அவை. ஒவ்வொரு நாளும் மாலை 5.00 மணிக்கு கருத்தரங்கம் பல்வேறு வகைத் துறை பேராசிரியர்களை கொண்டு நடத்தப் பெற்றது. 16.03.2018 ஆம் நாள் வெள்ளி காலை நாட்டு நலப்பணித்திட்ட சிறப்பு முகாமின் நிறைவு விழாவில் சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் கலந்து கொண்டு அனைவருக்கும் ஆசியுரைகள் வழங்கிச் சிறப்பித்தார்கள். மனம் நிறைந்த அவ்வாழ்த்துக்களைப் பெற்று முகாம் நிறைவு பெற்றது.

**முடிவுரை :**

திருமடம் எங்களுக்கு மிகப்பெரிய உதவிகளைச் செய்தது. சுவாமிகளும் அலுவலர்களும் தங்கள் பிள்ளைகள் எனக் கருதி எங்களைப் பாதுகாத்து உதவிகள் புரிந்தனர். அவர்களின் ஆசிர்வாதத்தால் முகாம் இனிதே நிறைவு பெற்றது. எங்களுக்கு உதவி அருள்புரிந்த சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளுக்கும், திருமடத்திற்கும் இராமசாமி தமிழ்க் கல்லூரியின் செயலர் திருமிகு. பெரி. வீரப்பன் அண்ணன் அவர்களின் சார்பிலும், மேனாள் முதல்வர். தமிழாகரர் தெ. முருகசாமி அய்யா அவர்களின் சார்பிலும், முதல்வர் பேராசிரியர்கள் சார்பிலும் நாட்டு நலப்பணித்திட்ட அலுவலர் முனைவர் இரா. கீதா மற்றும் திட்டத்தின் தன்னார்வத் தொண்டு மாணவர்கள் சார்பிலும் நன்றிகளையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்வதில் மகிழ்கிறோம்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## வெகுளாமை

(சினம் கொள்ளாமை)

1. **செல்லிடத்துக் காப்பான் சினம்காப்பான் அல்லிடத்துக்
காக்கில்என் காவாக்கால் என்.**

செல்லிடத்து – சினம் செல்லக் கூடிய இடத்தில்; காப்பான் – அது தோன்றாமல் காப்பவன்; சினம் காப்பான் – சினம் கொள்ளாதவன் ஆவான்; அல்லிடத்து – சினம் கொண்டாலும் அது செல்லாதவிடத்து; காக்கில்என் காவாக்கால் என் – சினம் தோன்றாமல் காத்தால் என்ன? காக்காவிட்டால் என்ன?

ஒருவனுடைய சினம் செல்லக் கூடிய மெலியவரிடத்தில் சினத்தைக் காப்பதே சிறப்பு; சினம் செல்ல முடியாத வலியவரிடத்தில் சினம் காப்பதால் சிறப்பில்லை.

2. **செல்லா விடத்துச் சினம்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற.**

செல்லாவிடத்து – சினம் செல்ல முடியாத வலியவரிடத்தில்; சினம் தீது – சினம் கொள்ளுதல் தீங்காகும்; செல்லிடத்தும் – சினம் செல்லக்

கூடிய மெலியவரிடத்தும்; இல் அதனின் - சினம் கொள்ளுதலைவிட இல்லை; தீய பிற - வேறு தீங்கு இல்லை.

சினம் செல்ல முடியாத வலியவரிடத்தில் சினம் கொள்ளுதல் தீங்காகும்; சினம் செல்லக் கூடிய மெலியவரிடத்தில் சினம் கொள்ளுதலைவிடவும் வேறு தீங்கு இல்லை.

3. மறத்தல் வெகுளியை யார்மட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும்.

மறத்தல் வெகுளியை - சினத்தை மறந்து விடுக; யார் மாட்டும் - எவரிடத்தும்; தீய பிறத்தல் - தீமை உண்டாவது; அதனான் வரும் - சினத்தால் வரும்.

சினத்தால் தீமைகள் எல்லாம் உண்டாகும் என்பதால் எவரிடத்தும் சினம் கொள்ளுதலை மறந்து விடவேண்டும்.

4. நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற.

நகையும் - முக மலர்ச்சியையும்; உவகையும் - மன மகிழ்ச்சியையும்; கொல்லும் - கொல்லுகின்ற; சினத்தின் - சினத்தை விட; பகையும் - பகைமை; உளவோ பிற - பிற உள்ளனவோ?

முகமலர்ச்சியையும் மன மகிழ்ச்சியையும் கொல்லுகின்ற சினத்தை விட வேறு பகைகள் உள்ளனவா? இல்லை?

5. தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

தன்னைத்தான் காக்கின் - தனக்குத் துன்பம் வராமல் தன்னைக் காத்துக் கொள்ள நினைத்தால்; சினம்காக்க - சினம் தோன்றாமல் காக்க வேண்டும்; காவாக்கால் - காக்கவில்லை என்றால்; தன்னையே கொல்லும் சினம் - சினத்தைக் காவாதவனை அச்சினமே கொன்றுவிடும்.

ஒருவன் தன்னைக் காத்துக் கொள்ள நினைத்தால் சினம் தோன்றாமல் காக்க வேண்டும்; சினத்தைக் காக்கவில்லை என்றால் சினம் கொண்டவனையே அச்சினம் கொன்றுவிடும்.

**6. சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும்.**

சினம் என்னும் – சினம் என்று சொல்லப்படுகின்ற; சேர்ந்தாரைக் கொல்லி – அது சேர்ந்தவரைக் கொல்லுகின்ற சினம்; இனம் என்னும் – இனம் என்று சொல்லப்படுகின்ற; ஏமப் புணையைச் சுடும் பாதுகாப்பான புணையையும் சுட்டு விடும்.

சினம் என்னும் பண்பு அது சேர்ந்திருப்பவரைக் கொன்றுவிடும்; அது மட்டுமல்லாமல் சினம் கொண்டவனுக்கு இனமாக உள்ள பாதுகாப்பான உறவு என்னும் புணையையும் அழித்துவிடும்.

**7. சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு
நிலத்து அறைந்தான் கைபிழையா தற்று.**

சினத்தைப் பொருள் என்று கொண்டவன் – சினத்தைத் தனக்குரிய பெரும் பொருள் என்று நினைப்பவன்; கேடு – அழிதல்; நிலத்து அறைந்தான் – தரையின் கண்கையால் அடித்தவன்; கைபிழையா தற்று – அவன்கை தப்பாது துன்புறுவது போலாம்.

சினத்தைத் தனக்குரிய பெரும்பொருள் என்று நினைப்பவன் அழிதல் என்பது தரையில் கையால் அடித்தவனின் கை துன்புறுவது போலாம்.

**8. இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.**

இணர்எரி தோய்வன்ன – கொத்தாக நெருப்புச் சேர்ந்து தோய்ந்தது போல; இன்னா செயினும் – ஒருவன் துன்பம் செய்தாலும்; வெகுளாமை புணரின் – அவன்மீது சினம் கொள்ளாதிருத்தல்; நன்று – நன்மை ஆகும்.

கொத்தாக நெருப்புச் சேர்ந்து தோய்ந்தது போல ஒருவன் துன்பம் செய்தாலும் அவன்மீது சினம் கொள்ளாதிருத்தலே நன்மை ஆகும்.

**9. உள்ளிய எல்லாம் உடன்எய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்.**

உள்ளிய எல்லாம் – நினைத்த எல்லாவற்றையும்; உடன் எய்தும் –

உடனே பெறுவான்; உள்ளத்தால் - மனத்தால்; உள்ளான் வெகுளி எனின் - சினத்தை நினைக்கவில்லை என்றால்.

மனத்தினால் சினம் கொள்ள நினைக்கவில்லை என்றால் தான் நினைத்த எல்லாவற்றையும் உடனே ஒருவன் பெறுவான்.

10. **இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை.**

இறந்தார் - சினம் மிக்கவர்; இறந்தார் அனையர் - இறந்தவர்களைப் போன்றவர்; சினத்தைத் துறந்தார் - சினத்தை விட்டவர்கள்; துறந்தார் துணை - பற்றற்றவர் தன்மையில் கருதப்பெறுவர்.

சினம் மிக்கவர் இறந்தவர்களைப் போன்றவர்; சினத்தை விட்டவர்கள் பற்றற்ற துறவினர் போன்றவர் ஆவர்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### மாபாதகம் தீர்த்தது

பாண்டியன் குலோத்துங்கன் ஆட்சி புரிந்து வந்த நாளிலே அவந்தி என்ற நகரத்திலே ஒரு மறைக்குலத்தான் வசித்து வந்தான். அவனுக்கு மனைவியொருத்தி இருந்தாள். அவள் நிரம்ப அழகைப் பெற்றிருந்தாள். அவர்களுக்குக் காலகாலத்திலேயே மகன் ஒருவன் பிறந்தான். அந்த மகன் இளமை கொழிக்க வளர்ந்துவந்தான். வயது ஏற ஏறப் பல கொடிய செய்கைகளையும் செய்து வந்தான். நல்ல காளைப் பருவம் வந்தது அவனுக்கு. அதன் காரணமாகக் காமம் மிகுந்தது. கருத்திழந்த பாவியும் ஆனான். காம வெறி கண்ணை மறைத்து அறிவை அழித்தது. கட்டுக்குலையாமல் பேரழகியான தனது அன்னையாரையே தனது இச்சைக் குரிய பொருளாகக் கோரினான். குணங்கெட்டு இழிந்த அவனது அன்னையும் மகனது தகாத விருப்பத்திற்கு இணங்கி விட்டாள். பெண் குலத்திற்கே உரிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற நான்கு சிறந்த குணங்களையும் நீக்கி மிருகமாகி விட்டாள் தாயும் !

காமத்து இன்பம் சிறிதேயானாலும் துன்பம் பெரிதே வரும்; தீவினை மகனை மேலும் வாட்டியது. காமப் பாம்பு அறிவுத் திங்களை விழுங்கியது. அந்தக் கடை மகன் அன்னையுடன் கூடி ஒழுகுதலை

அவன் தந்தை அறிந்திருந்தாலும் விஷயம் வெளிப்படாதபடி சும்மாயிருந்தான். ஒரு நாள் நேரடியாகப் பார்த்தபோதும்கூட ஏதும் சொல்லாமல் சென்று விட்டான். மகனுக்குத் தந்தையின்மேல் கோபம் வந்தது. தந்தை இருப்பதே பெரிய இடஞ்சலாகப்பட்டது. ஆதலால், தந்தையைக் கொன்று விடுகிறேன் என்று கிளம்பினான். அதைக் கண்ட மனைவித்தாய், அன்னையிடம் காமக் களியாட்டம் புரியும் பாவியான நீ அப்பனைக் கொன்றாயானால் பெரும் பாவி ஆவாய் என்றாள். பாவி மகன் செவி சாய்க்கவில்லை. ஒரு மண்வெட்டியை எடுத்துக்கொண்டு சென்று தனது தந்தையைத் துண்டு துண்டாக வெட்டிக் கொன்று விட்டான். பின்னர் அந்த மகாபாதக மகன் அன்று இரவே தந்தையின் உடலைக் கொளுத்திவிட்டுத் தனது தாய் மனைவியுடன் சுமக்கக்கூடிய அளவு பொருள்களையும் எடுத்துக்கொண்டு காட்டு வழி நடந்து நெடும் தொலைவு சென்று விட்டான்.

செல்கின்ற வழியிலே வழிப்பறி வேடர் சிலர் இருவரையும் வளைத்துப் பிடித்துக் கொண்டனர். அவன் கையிலிருந்த அத்தனை பொருள்களையும் பிடுங்கிக் கொண்டனர். அவனது தாயையும் இழுத்துச் சென்று விட்டனர். எல்லாப் பொருள்களையும் ஒருங்கே ஒரே சமயத்தில் இழந்த இழிந்த மகன் தனியன் ஆனான்.

மண்வெட்டியால் வெட்டுப்பட்டு இறந்துபோன தந்தை, இப்போது பிராமணக் கொலையும் தந்தைக் கொலையும் ஒன்று சேர, ஒரு மகாபாதக உருவமாய் வந்து தன் மகனைப் பிடித்துக் கொண்டான். கொலைப் பழி மகனைப் படாதபாடு படுத்தி வைத்தது. அவனை முன்னும் பின்னும் சூழ்ந்து அல்லும் பகலும் அனவரதமும் தொந்தரவு செய்து கொண்டே இருந்தது. ஐயோ ! நான் என்ன செய்வேன்? என்று புலம்பிக் கடும் துன்பம் அடைந்து பல நாட்கள் நாடெங்கும் பயந்து வருந்தித் திரிந்தான். திரிந்து கொண்டிருந்த மாபாதக மகன் மதுரையம்பதிக்கு வந்து சேர்ந்தான்.

அச்சமயம் மீனாட்சியம்மையும் சோமசுந்தரக் கடவுளும் முறையாக வேடுவச்சியாகவும் வேடுவனாகவும் வேஷம் தாங்கிக் கோபுர வாசல் பக்கத்திலே அமர்ந்தருளிச் சொக்கட்டான் விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது அங்கு வந்து கொண்டிருந்த மாபாதக மகனைக் கண்டு, கடவுள், எவரும் மனத்தாலும் நினைத்துப் பார்க்க முடியாத பெரிய படுபாவி வருவதைப் பார்; காமவெறியால் குணம் கெட்டவன் கொலைகாரன் இத்தகைய இழியவனுக்கு நரகமே

கிடைக்கும் என்றார். நெருங்கி வந்த மாபாதகனைப் பார்த்து, நீ ஏன் துன்பத்தால் அலைந்து வாடுகிறாய்? என்று வினாவினார்.

முன்பிறப்பில் தான் செய்த பாவ முதிர்வாலே தான் காமவெறி யடைந்து தன் தாயையே கூடியதையும், தந்தையைக் கொன்றதையும், தன்னைப் பிரம்ம ஹத்தி பிடித்து வருத்துவதையும் எடுத்து விளக்கி அழுதுகொண்டு நின்றான் மாபாதகன். அவனது பேரவல நிலையைக் கண்ட பரம்பொருள் உள்ளத்திலே கருணைகொண்டார். உனது கொடிய பாவம் இந்த நகரத்தில்தான் விலகும் வேறெங்கும் விலகாது. ஆதலால், நீ இவ்வூரிலேயே பிச்சை எடுத்து ஒரு வேளை உண்பாய். சிவனடியார்களுக்குத் தொண்டு புரிவாய். சூரியோதயத்துக்குக் கொடுக்கவேண்டும். ஒவ்வொரு நாளும் மூன்று வேளைகளிலும் திருக்கோவிலில் உள்ள புறத்தொட்டித் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து விட்டுச் சிவ பெருமானை நூற்றெட்டுத் தடவை அங்கப் பிரதட்சிணம் செய்யக் கடவாய். இத்தகைய தவநெறியைக் கைக்கொண்டால் உனது பிரம்மஹத்தி தோஷம் நீங்க வழியுண்டு என்று பரிகார மொழி பகர்ந்தருளினார்.

சிவபெருமான் மொழிந்தவற்றைக் கேட்ட வேடு வச்சியான மீனாட்சியம்மையார் மிகவும் வியப்படைந்தார். பெருமானே! என்ன விந்தை! கடு நரகத்திலே கோடி வருஷங்கள் கிடந்து வருந்தவேண்டியவனுக்கு உய்யும் வழிகாட்டி அருளியது என்னவோ? என்றார். அத்தகைய கொடும்பாவியர்களைக் காப்பதுதானே எமது தருமம், என்று திருவாய் மலர்ந்தளிருனார் வேடர்சிவனார். எல்லாம்வல்ல எம்பெருமானே! தாங்கள் திருவுளம் வைத்தால் கொடும் பாவிகளும் உய்ந்துவிடுவார்களே; தேவரீர் திருவிளையாடல்களை அறிய வல்லவர் யார்? என்று கூறி மகிழ்ந்தார் மீனாட்சியம்மையார். இருவரும் பின்னர் மறைந்தருளினர்.

அதைக்கண்ட மகாபாதகனும் பேராச்சரியம் அடைந்தான். மதுரைத் தெய்வம் அருளிய வண்ணமே செய்து வந்தான் பழிகாரப் பார்ப்பான். நல் விரதங்களிலேயே தனது மாபாதகம் நீங்கப் பெற்றான். திவ்வியமான பிராமண உருவம் அடைந்தான். வாசா மகோசரனாகிய சோமசுந்தரப் பெருமான்மீது பல வடமொழித் துதிப்பாடல்களைப் பக்தியுடன் பாடி அவரது திருவடிகளில் சூட்டினான். பின்னர், சச்சிதானந்த ஸ்வரூபமாகிய சிவபெருமானின் சேவடிகளிலே கலந்து கொண்டான்.

*(தொடரும்...)*

**Available Knitted Fabric** (On Order Basis)

| | |
|---|---|
| **18 GG Rib** | **Dia : 11 - 36** |
| **24 GG Single Jersey** | **Dia : 16 - 36** |
| **28 GG Single Jersey** | **Dia : 18 - 34** |
| **28 GG SJ Openwidth** | **Dia : 30 - 34** |

**Hosiery Yarn Available**

**PC [illegible] / 100 % COTTON / SLUB / VISCOSE**

***THE PARADISE KNITTERS***

2/311, Periyandipalayam Pirivu,
6th Cross, Hare Rama Hare Krishna Nagar
Mangalam Road, **TIRUPPUR - 641 687**
Mobile : 98652 04051 , 98651 22844 , 98422 70168

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

**2018 - 2019ஆம் கல்வி ஆண்டிற்கான மாணவர் சேர்க்கை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.**

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!

Thirumagal
04565 - 232991